ளத்தின் உள்ளே இருக்கும் அதிக வெப்பத்தினாலேயே அக்கினி மலை வெடிப்புகள் உண்டாவதாகத் தோற்றவில்லை. அவ்வெடிப்புகளுண்டானது, பூமியின் மேற்புறத்திலிருந்து ஜலமானது ஏராளமாய் உட்புறத்தில் கொதிப்புக்கொண்டிருக்கும் பாகத்திற்குப் போய்ச் சேருவதினாலேயே என்பது அனேக பண்டிதர்களின் கொள்கை. சமுத்திரங்களின் அடித்தரையும், அனேகம் ஏரிகள், நதிகள் முதலியவற்றின் தரைமட்டமும் துவாரமுள்ளவைகளா யிருப்பதாலும், வருஷா வருஷம் பெய்யும் மழைகளின் நீர் நிலத்தில் உள்ள துவாரங்களின் வழியாய் இறங்குவதாலும், அக்கினி மலைகளுக்கு அடியில் அமைந்திருக்கும் சூடுண்ட, பெரிய பிலங்களில் அதிக தண்ணீர் வந்து சேருகின்றது. தண்ணீரானது அதை விட்டு வெளிப்பட வகையில்லாமல் வெகு சீக்கிரத்தில் கொதிப்புக்கொண்டு நீராவியாய் மாறும். மாறினதும், போக்கிடமில்லாமல் மேலுக்கு மேல் அதிக சூடுகொள்ளவே, ஆவியானது பரவ வழியில்லாமல் அக்கினி குண்டத்தின் நாற்புறமும் அதிவேகத்துடன் தாக்க மேற்புறத்தில் பூமியை நோக்கிய பாகமானது அனேகவித இடி முழக்கம், குமுறுதல், கிடுகிடுத்தல் முதலான சத்தங்களோடு வெடிக்கும். இச்சமயங்களில் உண்டாகும் பூமியின் அதிர்ச்சிக்கு பூகம்பம் என்று பெயர். (இதைக்குறித்த விஷயங்களை பின்னால் பிரத்தியேகமாய் எழுதுவோம்.) ஆ! இதென்ன ஆச்சரியம்! சாமானியமான நீராவிக்கு அதிக கனமாயுள்ள பூமியைப் பிளக்கவும், பென்னம் பெரிய பாறுங்கற்களால் அமைந்துள்ள மலைகளைத் தகர்த்துச் சின்னாபின்னமாக்கவும் கூடிய வலிமையுண்டோ என சிலர் சந்தேகிக்கக்கூடும். ஆம், சந்தேகமுண்டாவது சகஜமே. நாற்பது அல்லது ஐம்பதுபூகா கிருதியுள்ள வண்டிகள் சேர்ந்த நமதுரயில் வண்டித் தொடர்கள் ஆயிரக் கணக்கான மனிதர்களையும், மிருகங்களையும், உத்திரங்கள், மூட்டைகள் முதலான பலவகை பாரமுள்ள பண்டங்களையும் வெகு சுலபமாய் இழுத்துக்கொண்டு போவது எதின் வலிமையால் என்று அவர்கள் சற்றே நிதானித்து யோசித்துப் பார்த்தால் சந்தேகம் ஒரு நொடிப்பொழுதில் தீரும். அவைகள் இழுக்கப்படுவது இஞ்ஜின் வண்டியென்று சொல்லப்படும் முதல்வண்டியிலிருக்கும் ஒரு சிறு தொட்டியில் நீர் வார்த்து அதன் கீழ் இருக்கும் உலையின் உதவியால் உற்பத்தியான நீராவியாலல்லவோ? இவ்வளவு கொஞ்சமான நீராவிக்கேஇவ்வளவுவேகமிருக்குமானால்பூமிக்கடியில் பெரிய தடாகங்கள் போன்று விசாலமாயுள்ள அக்கினி குண்டங்களில் தண்ணீர் வந்து சேரும்போது அதனால் உண்டாகும் அபரிமிதமான நீராவியின் வலிமையைக் குறித்துச் சொல்லவும் வேண்டுமோ? இது நிற்க.

எரிமலைக் காட்சிகள்.

நீராவியின் அதிவேகத்தால் பூமியின் மேற்புறம் வெடிக்குமென்று சொன்னோமே. வெடித்தவுடன் நீராவிப் படலமானது மேகத்தையொத்து வெடிப்பாலமைந்த உலைவாயின் வழியாய் ஆகாயத்தில் அதிக உன்னதமாய்ச் சுழன்றுகொண்டு கிளம்பிச்செல்லும். சில சமயங்களில் இப்படி எழும் ஆவியானது மலைச்சிகரத்திற்கு மேல் 1 மைல் அல்லது 2 மைல் வரையில் ஒரே ஸ்தம்பாகாரமாய் எழும்பி நிற்கும். இத்துடன் சில சமயங்களில் தூசு தும்புகள் ஏராளமாய் வெளியே கொண்டு வரப்படுகிறபடியால் சுற்றுப்பக்கத்தில் வெகு தூரம் வரையில் சூரிய கிரணங்களே தென்படாதபடி புகை சூழ்வது போல் கவிழ்ந்து இருள் மூடச்செய்யும். ஆவி நீங்கவே அதனடியில் உலைபோல் கொதித்துக்கொண்டிருக்கும் தண்ணீர் கலந்த உருகிய கற்குழம்பானது அதிவேகத்துடன் பக்கங்களில் பலமில்லாத பாகங்களைப் பிளந்துகொண்டு பெரிய உலைவாயின் வாயிலாக அக்கினிமழை பொழிவது போலவும், கல்மாரி, மண்மாரி பொழிவது போலவும், சரமாரியாய்ப் பெரும்

பாறை, சாம்பல், மண் முதலியவற்றுடன் கலந்து வீசி அடிக்கும். மேலும் கற்குழம்பானது உலைவாயின் விளிம்பின் வழியாய் அபரிமிதமாய் வந்து நாலாபக்கத்திலும் சிற்றருவிகள் போலும், இரண்டு மூன்று நதிகள் சேர்ந்து பெருக்கெடுத்துப் பெருவெள்ளமாய்க்கரைபுரண்டு ஓடுவது போலும் உருக்கிவார்த்த இரும்புபோல் பளபளவென்று மின்னிக்கொண்டு, நெருப்புமயமான நீராக அதிதீவிர கதியுடன் செல்லும். இதுவுமல்லாமல் மலையிலிருந்து இழிந்த ஜலம் மண்ணுடனும் சாம்பலுடனும் கலந்து மண்ணூருக ஒரு பக்கம் ஓடும். கற்குழம்பு வெள்ளமானது ஆற ஆற மந்தகதியடையும். இவ்வெள்ளத்தி லிருந்து எழும் ஆவியும் உலைவாய்களிலிருந்து குமுறும் ஆவியும் ஆகாயத்தை அளாவி எல்லாவற்றையும் ஒரே மறைப்பாக மூடிவிடும். இதனடுவில் மலையின் பிளப்பிலிருந்து செவ்வென்று சிவக்கக் காய்ந்த அக்கினி மயமான குண்டாங் கற்களும், பழுக்கக் காய்ந்து பளீர் என்று மின்னும் உலோகக் களிம்புகளும், பெரிய கல்துண்டுகளும், உலைவாயின் வழியாய் உயர வீசப்பட்டு, சில மறுபடியும் பிளப்பில் விழுந்தும், சில மலைச்சார்பில் விழுந்து சரிந்து ஓடியும், சில மலையின் சுற்றுப்புறத்திலுள்ள நாட்டுப் புறங்களில் விழுந்தும், இது என்ன ஊழி காலந்தானோ என்று எல்லோரும் திகைத்துத் தவிக்கும்படி செய்யும். கற்குழம்பு வெள்ளமானது மலையைச் சுற்றியிருக்கும் பரப்புகளையும், துரவுகளையும், ஏரிகளையும், ஆறுகளையும், ஒரே வெள்ளக்காடாக்கி எல்லாவற்றையும் பாழாக்கிவிடும். ஆடுமாடுகள் முதலாகிய விலங்கினங்களில் இவ்வெள்ளத்தில் அகப்பட்டு மாய்பவை அனேகம். சுற்றுப்பக்கத்துக் கிராமங்கள், வீடுவாசல்கள் முதலானவைகள் அக்காலத்தில் விசேஷமாய் உண்டாகும் பூகம்பங்களால் இடிந்து நொறுக்குண்டு தீப்பட்டு எரிந்து கொடிப்பொழுதில் நீறுகிவிடும். இச்சமயங்களில் வீடு இடிந்து விழுவதாலும், இன்னும் மேலே சொல்லிய மற்ற சங்கடங்களாலும் மாளும் ஜனங்களுக்குக் கணக்கில்லை. எரிமலைகளால் உண்டாகும் கோரமான கேட்டையும் நஷ்டங்களையும், உலக அந்தியத்தில் உண்டாகும் என்று சொல்லப்படும் பிரளயத்திற்குச் சமானமாகவே சொல்லலாம். இத்தாலியா தேசத்தில் [1] 'நேபில்ஸ்' நகரையடுத்த [2] 'விசூவியஸ்' எரிமலையானது 1872-ம் வருஷம் வெடித்து அக்கினி கக்கியபோது பெருக்கெடுத்த அக்கினிக் கற்குழம்பானது ஏறக்குறைய 20-அடி ஆழமும் 3,000-அடி அகலமுமாய்ப் பரவி அனேகம் கிராமங்களைப் பாழாக்கினதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்போது அம்மலையிலிருந்து கிளம்பிய கற்கள் சுமார் 4,000-அடிவரை மேலே சென்றனவாம்.

### உலகத்திலுள்ள எரிமலைகள்.

இதுவரையில் உலகத்தில் சற்றேறக்குறைய 3000 எரிமலைகள் வரையில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. நமது இந்தியாவுக்கு அதிக சமீபத்தில் உள்ள எரிமலை, [3] வங்காளக்குடாக்கடலில் [4] 'அந்தமான்' தீவுகளுக்குக் கிழக்கே இருக்கும் 'பாரன் ஐலண்டு' (Barren Island) என்று சொல்லப்படும் தீவிலுள்ள மலையே. 'பாழ்நிலத்தீவு' என்று பொருள்படும் பெயரையுடைய இந்தத் தீவை சமுத்திர மத்தியின்மேலே கிளம்பியிருக்கும் ஒரு எரிமலை என்றே சொல்லலாம். இம்மலையின் உயரம் 980 அடி இதன் சிகரத்திலிருந்து அப்போதைக்கப்போது அக்கினிக்கற்களும், சூடுண்ட கந்தக ஆவிப்படலங்களும் கக்கப்படுகின்றன.

### மிகவும் உன்னதமான எரிமலை.

[5] தென் அமெரிக்காவில், [6] 'ஈக்குவடோர். மாகாணத்தில், [7] நிரட்சரேகைக்கு அருகாமையில், [8] 'ஆண்டிஸ்' மலைத்தொடரிலுள்ள [9]

1 Naples.
2 Mount VeSuvius.
3 Bay of Bengal.
4 The Andaman Islands.
5 South America.
6 Ecuador.
7 Equator.
8 The Andes.
9 Cotcpaxi

'கொட்டப்பாக்ஸி' என்னும் மலையே உலகத்தி லுள்ள எரிமலைகளிலெல்லாம் அதிக உன்னத மும், கடூரமுமானது. இதன் உயரம் 19,000 அடி; அதாவது ஏறக்குறைய நான்கு மைல் இருக்கும். இது உலகத்தார்க்குத் தெரிந்தது முதல் அக்கினி கக்கினவண்ணமாகவே இருக் கிறது. இதில் உண்டான வெடிப்பில் ஒரு கா லத்தில் 200-டன் எடை அல்லது 2,732 கன அடியுள்ள ஒரு பெரும் பாறைத்துண்டு வீசி எறியப்பட்டு 9-மைல் தூரம்போய் விழுந்ததா கச் சொல்லப்பட்டிருக்கிறது. சுலபமாய்த் தெ ரிந்துகொள்ளும்படியாய் இந்தக் கல்லின் பா ரம், 14-அடி நீளம், 13 அடி அகலம், 14 அடி கனமுள்ள ஒரு பாறைக்குச்சரியானதாகஇருப் பத்தென்று சொல்லலாம்.

மிக விசாலமானது.

உலகத்தில் உள்ள எரிமலைகளிலெல்லாம் மிக விசாலமானது வடபசிபிக் மகாசமுத்திரத் தில் [1] 'ஸாண்ட்விட்ச்' தீவுகளில் ஒன்றாகிய [2] 'ஹவேய்' தீவிலுள்ள [3] கிலௌயிர் மலை. இதின் அக்கினி கக்கும் உலைவாயானது 9-மைல் சுற்றளவும், சற்றேறக்குறைய $1\frac{1}{2}$-சதுர மைல் விஸ்தீரணப் பரப்பு முடையது. ததும் பிக் கொதித்துக் கொந்தளித்துக் கொண்டி ருக்கும் அக்கினி நீரால் நிறைந்துள்ளது. பார்ப்பதற்கு ஒரு அக்கினிக்கடல்போன்று விளங்கும்.

எக்லா எரிமலை.

இங்கிலாந்துக்கு சற்றே வடமேற்காய் ஐரோப்பா அமெரிக்கா கண்டங்களுக்கு மத்தி யில் 'டென்மார்க்கு' தேசத்து அரசன் ஆட்சிக் குள் அமைந்த 'ஐஸ்லாண்டு' என்ற ஒரு தீவு இருக்கிறது. இதில் எரிமலைகள் அனேகம் உள. அவற்றுள் முக்கியமானவை 'எக்லா,' 'ஸ்காப்டார் ஜோகல்,' என்ற இரண்டு மலைகள். எக்லா மலையானது ஏறக்குறைய 5,000-அடி உயரமும், 12-மைல் சுற்றளவு முடையது. இம் மலையில் 1845-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 2-ம் தேதி கொதிப்பெடுத்தபோது வெளியே வீசி எறியப்பட்ட சாம்பலானது இத்தீவிற்கு 600-மைல்களுக்கப்பால் இருக்கும் [1] 'ஆர்க்னி' தீவுகளில் போய் விழுந்ததாம். அந்த மாதம் 15-ம் தேதி மறுபடியும் எடுத்த கொதிப்பில் கற்குழம்பு வெள்ளம் ஏராளமாய் மலையினின் றும் வெளிப்பட்டு பிரவாகித்தது. மலையி லிருந்து இரண்டு மைல் தூரத்தில் இந்த வெள்ளம், 1-மைல் அகலமும், 40-முதல் 50-அடிவரையில் ஆழமுமுள்ளதாக விருந்தது. 17௩3-ம் வருஷம் 'ஸ்காப்டார்' மலை பொங் கத் தலைப்பட்டு இரண்டு வருஷகாலம் ஓயா மல் அக்கினி மழை பொழிந்தது. இப்படி யாகப் பொழிந்த கற்குழம்பு வெள்ளமானது 11-வருஷங்கள் வரையில் புகைந்துகொண்டி ருந்ததாம். இந்த வெள்ளம் இரண்டு ஆறுகப் பெருக்கெடுத்து ஒரு ஆறு 50-மைல் நீளமும், 12-மைல் அகலமுமுடையதாக ஓடியதாம். மற்றொரு ஆறே 40-மைல் நீளமும், 7-மைல் விஸ்தீர்ணமுமுள்ளதா யிருந்தது. இவை கள் 100-முதற்கொண்டு 600-அடி ஆழமுள்ள வைகளா யிருந்தன. இம்மலைக் கொதிப்பி னால் உண்டான கேடு மிகுதி. புல் பூண்டு முதலியவை யற்றுப்போனதால் ஆடுமாடு முதலிய மிருகசாதிகள் அனேகமாய் மாண் டன. இது வல்லாமல் கற்குழம்பு முதலிய வைகளால் உயிர் விட்டவை அனேகம். மலையி லிருந்து வந்த கந்தகப்புகை முதலியவற் றால் காற்றுக்கெட்டு தூர்க்கந்த முண்டாய் அனேக ஜீவன்களை மாய்த்துவிட்டது. சமுத் திர ஜலமும் கரைக் கருகாமையில் கெட்டி ருந்தபடியால் அவ்விடங்களில் மீன்களின் சஞ்சாரமேகொஞ்சகாலம் அற்றுப்போயிற்று. ஆகவே மனிதனுக்கு அவ்விடத்தில் முக் கிய ஆகாரமாகிய மீனும் கிடைப்பதரிதாய் விட்டது. பானம் செய்வதற்கு சுத்த ஜலமு மில்லாமலிருந்தது. இவ்வாறாக விஷக்காற் றாலும், விஷங்கொண்ட தண்ணீராலும், க்ஷா மத்தினாலும், இத்தீவிலுள்ள 50,000 ஜனங் களில் ஏறக்குறைய 9,000 பேர் இந்த இரண் டு வருஷங்களில் இறந்துபோய் விட்டார்கள்.

1 The Sandwich Island. 2 Hawaii Island.
3 Kilauer.

1 The Orkney Islasnd.

வேடிப்புக்கண்டு சமுத்திரத்தில் மூழ்கிப்போன எரிமலை.

நமது இந்தியாவுக்கு தென்கிழக்குப் பாகத்திலிருக்கும் [1] 'சுமாத்திரா' தீவுக்கும், ஜாவா' தீவுக்கும் இடையே உள்ள [2] 'சுந்தா' ஜலசந்தியில [3] 'கரகடோவா' என்ற ஒரு எரிமலை உண்டு. இதில் 1883-ம் வருஷத்தில் ஒரு பெரு வெடிப்புக்கண்டு பூகம்பமும் அதிகமாய் உண்டாயிற்று. அதன் அதிர்ச்சியால் அவ்வெரிமலை அனேகமாய் சமுத்திரத்தில் முழுகிப் போய்விட்டது. அத்தருணத்தில் உண்டான பேரொலியோ அனேக மைல் தூரம் வரையில் கேட்டதாம். சமுத்திரத்தில் உண்டான குழப்பமும் பேரலைகளும் ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் எட்டியதாம். அப்போது உண்டான பிரசண்ட மாருதமோ உலகமுழுதும் ஒரு சுற்று சுற்றி வந்ததாம். தற்காலத்திலுண்டான எரிமலைக் கொதிப்புகளிலெல்லாம் மிகவும் கொடியது இதுவே. இப்பெருங் கேட்டால் ஏறக்குறைய 30,000 ஜனங்கள் வரையில் மாண்டார்கள். இந்த சமயத்தில் சில தினங்கள் வரையில் அனேகமாய் எல்லா தேசங்களிலும் சூரியன் ஒளி மழுங்கிச் சற்றே பசுமை நிறத்துடன் பிரகாசிக்கக் கண்டிருக்கலாம். அப்போது இந்நாட்டிலும் சூரியன் பச்சை நிறமாகப் பிரகாசித்ததை நோட்டமிட்டது இன்னும் என் ஞாபகத்தில் இருக்கிறது. சூரியனை அப்போது கண்கூசாமல் பார்க்கும்படியாயிருந்தது. இதற்குக் காரணம் மேற்சொன்ன எரிமலையின் கொதிப்பினால் மேலே வீசப்பட்டு ஆகாயத்தைக் கவிழ்ந்துகொண்டிருந்த புகை, தூசு முதலிய இவைகளின் கூட்டம் சூரியனை ஒருவாறு மறைத்ததினாலேயே.

மஹாபிரமாதமான வேடிப்புக்கண்ட எரிமலை.

இதுவரையில் உண்டான எரிமலைவெடிப்புகளிலெல்லாம் பிரமாதமாயும், அகோரமாயும்; சாம்பலையும் மண்ணையும் கக்கினது வடஅமெரிக்காவில், 'நிக்கரகுவா' மாகாணத்தில் உள்ள [4] 'காஸிகியூன' என்னும் எரிமலையே. இது 26-வருஷங்கள் ஒய்ந்திருந்து கடைசியாய் 1835-ம் வருஷத்தில் ஒரு பயங்கரமான வெடிப்பெடுத்து நெருப்பைக் கக்கத்தலைப்பட்டது. இச்சமயத்தில் இம்மலையுள்ளிருந்து வந்து விழ்ந்த சாம்பலுக்கும் மண்ணிற்கும் அளவில்லை. இவைகள் மேக மண்டலத்தை எட்டி வானத்தை நன்றாய்க் கவிழ்ந்து கொண்டபடியால் நல்ல நடுப்பகலிற்கூட சூரியரஸ்மி கொஞ்சமேனும் நிலத்தில் படாமல மலையைச்சுற்றி சற்றேறக்குறைய 35-மைல் விஸ்தீரணத்திற்கு காரிருள் சூழ்ந்து பிரளயகால அந்தகாரம்போல் கவிழ்ந்து கொண்டது. இந்த மண்மாரி, மலையைச்சுற்றி ஏறக்குறைய 310 மைல் தூரத்திலுள்ள பிரதேசங்களிளெல்லாம் விழுந்தது. மலைக்கருகாமையில் 24 மைல் தூரத்திற்கு 10 அடி கனப்பிரமாணம் சாம்பல், மண், தூசுமுதலியவற்றால் மேடுண்டாயது. இம்மாரியில் உண்டாகிய நுண்ணிய தூசுகள் கீழ்புறம் காற்றால் அடித்துக்கொண்டு போகப்பட்டு 700 மைல்களுக்கு அப்பாலிருக்கும் மேற்கு இந்திய தீவுகளில் ஒன்றாகிய 'ஜமெய்க்கா' வில் உள்ள [1] 'கிங்ஸ்டன்' என்னும் பட்டணத்தில் மலையில் வெடிப்புக்கண்ட நான்காம் நாள் விழுந்ததாம்.

எரிமலைகள் பலவிதம்.

எரிமலைகளெல்லாம் எப்போதும் அக்கினியைக் கக்கிக்கொண்டிருப்பவையல்ல. சில 'ஆஸ்திரேலியாவுக்குக் கிழக்கிலிருக்கும் 'டொங்கா' என்னும் தீவிலுள்ள [2] 'டொபுவா' என்னும் எரிமலையைப்போலவும், 'ஆண்டிஸ்' மலைத்தொடரிலுள்ள [3] 'ஸாங்கே' 'கொடபாக்ஸி' என்னும் மலைகளைப்போலவும், அவைகள் தோன்றின நாள்முதற்கொண்டு அக்கினி வர்ஷம் செய்பவைகளாயிருக்கின்றன. வேறு சில ஒரு தடவை தங்கள் சுவரூபத்தைக்காட்டிய பிற்பாடு மறுபடியும் அவைகளுக்கு அடியில் இருக்கும் அக்கினிச் சுரங்கங்கள் தண்ணீரால் நிறைக்கப்படுமளவும் ஒய்ந்திருந்து திரும்பவும் வெடித்துப் பெருங்கேட்டை விளைக்கின்றன. சில வெடிப்புகள் உண்டான பிற்பாடு அக்கினி குண்டங்கள் இடிபட்டுத் தூர்ந்துபோய் விடுவதாலோ இன்னும் வேறு யாது காரணத்தாலோ மறுபடியும் உலைவாயைத் திறவாமல் அடங்கி விடுகின்கிறன. மற்றவைகளோ யா

1 Sumatra and Java Islands. 3 Mount Karakatoa.
2 The Strait of Sunda. 4 Coseguina in Nicaragua.

1 Kingston in Jamaica. 2 Tofva in Tonga Islands.
3 Mount Sangay.

தோன்றுக்கும் திங்கு விளைவிக்காமல் தங்கள் உலைவாயால் குப்குப்பென்று புகையையும், ஆவியையும் ஊதினவண்ணமாயிருக்கின்றன.

பெயர்போன எரிமலைகள்.

ஐரோப்பா கண்டத்தில் இத்தாலியா தேசத்திலுள்ள 'விசூவியஸ்' மலையும், சிசிலித் தீவிலுள்ள 'எட்னு' என்னும் மலையும் 'லிப்பேரி' தீவிலுள்ள [1]'ஸ்டிராம்போலி'யும், ஐஸ்லாண்ட் தீவிலுள்ள 'எக்லா' என்றமலையும் பெயர்போன எரிமலைகள். இவைகளில் விசூவியஸ் மலையானது இவ்வுலகிலுள்ள எரிமலைகளெல்லாவற்றிலும் பெயர் பெற்றதாதலின் இதைப்பற்றிப் பிரத்தியேகமாய் அடுத்த சஞ்சிகையில் எழுதப்படும். இவ்விடத்தில் 'எட்னு' எரிமலையைக்குறித்துஞ் சிறிதுசொல்வோம்.

'எட்னு' எரிமலை.

இம்மலையின் உயரம் 10,000 அடி: சுற்றளவு நூற்றெண்பது மைல் உள்ளது. இதில் 1667-ம் வருஷம் கொதிப்பெடுத்தபோது அதினின்றும்வந்து விழ்ந்த அக்கினி மழையால் 15 கிராமங்கள் எரிந்து நாசமாய் விட்டன. அப்போது பெருக்கெடுத்தோடிய கற்குழப்பு வெள்ளமானது அதன் போக்கிலிருந்த 'கடோனியா' என்னும் பட்டணத்தின் கோட்டைச் சுவரை முழுகடிக்கும்படி அவ்வளவு ஆழமாயிருந்தது.

மலைகள் திடீரெனக் கிளம்புவதும் அழுங்குவதும்.

பூமியின் உட்புறமிருக்கும் உஷ்ணத்தால் மலைகள் கொதித்தெழுந்து அக்கினிமழை பொழிவதல்லாமல், இக்கொதிப்புக்குக் காரணமாகும் சக்தியினுலேயே மலைகளைப் பூமிக்குள் அழுத்துவதும் வெட்ட வெளியாயிருந்த தரையில் மலைகள் இருக்கும்படியாய் பூமியின் உட்புறத்தில் இருக்கும் மலைகளை மேலே கிளப்புவதும் உண்டு. இதன் காரணமாகவே சமுத்திரங்களில் புதிய தீவுகள் உண்டாவதும், இருக்கும் தீவுகள் சமுத்திரத்தில் முழுகிப்போவதும் உண்டு. அமெரிக்கா கண்டத்தில் [2]'மெக்ஸிகோ' தேசத்தில் 'மால்பேய்' என்ற ஒரு பெரு மைதான வெளி இருந்தது. இதன் மேற்புறத்தில் கல்காடு ஒன்றும் வெகு காலமாய் இல்லாமலிருந்தது. ஆகவே 1759-ம் வருஷம் செப்டெம்பர் மாதம் 28-ம் தேதி அன்று இரவில் ஒரு மலைக்கூட்டம் இந்த இடத்தில் பூமியிலிருந்து வெளியே கிளப்பப்பட்டது. இவற்றில் ஆறு மலைகள் பூமி மட்டத்திற்கு மேல் 1312-முதல் 1640-அடி வரையில் உயரமுள்ளனவாயிருந்தன. இந்த மலைகளில் ஒன்று எப்போதும் கொதித்த வண்ணமாயிருந்தது.

1 Stromboli in the Lipari Islands. 2 Mexico.

இத்தாலியா தேசத்தில் [1]'பெய்யா' என்னுமிடத்திற்கு அருகாமைருல் உள்ள, புது மலை என்று பொருள்படும் பெயரை உடைய [2]'மான்டி நோவோ' என்னும் மலையானது 1538-ம் வருஷம் திடீரென பூமியின் மேலே கிளப்பப்பட்டது. இதன் உயரம் 456-அடி. இதன் சிகரத்தில் ஒரு அவிந்த உலைவாய் இருக்கிறது.

சமுத்திரத்தில் திடீரேனத் தோன்றி மறைந்த ஒரு தீவு.

ஐஸ்லாண்ட தீவிலுள்ள 'ஸ்காப்டர் ஜோகல் மலை' வெடிப்பெடுத்துக் கொதித்ததைக் குறித்து முன்னமே சொல்லியிருக்கிறோமல்லவா. இது கொதிக்கச் சில வாரங்களுக்கு முன் ஐஸ்லாண்ட தீவிற்கு மூன்று காததூரததிற்கு அப்பால் சமுத்திரத்திற்குள்ளிருந்து ஒரு சிறிய தீவு வெளிப்பட்டது. இத்தீவில் அனேக எரிமலைகள் இருந்தன. ஐஸ்லாண்ட தீவுக்கு அதிபதியாகிய டென்மார்க் அரசனே இத்தீவுக்கும் அதிபனுனன். ஆனல் இந்தத் தீவு எப்படி சடுதியாய்த் தோன்றியதோ அது மாதிரியாகவே அடுத்த வருஷத்தில் சமுத்திரத்திற்குள் முழுகிப்போய்விட்டது.

---

மண்மாரி மலைகள்.

சாதாரணமாய் முக்கியமான எரிமலைகளெல்லாம் புகை, ஆவி, உஷ்ணத்தால் உருகிய திரவ வஸ்துக்கள் முதலியவைகளைக் கக்குகின்றன. வேறு சில ஜலம் கலந்த மண்ணைத் தாரைதாரையாய்க் கக்குவது வழக்கம். இவைகளுக்குத்தாம் மண்மாரி மலைகளென்று பெயர். சில சமயங்களில் இவைகளிலிருந்து வெளியே கக்கப்படும் தண்ணீருடன் ஏராளமான சிறிய மீன்கள்வந்து விழுகின்றன.

1 Baia. 2 Monte Nuovo.

இவைகள் பூமிக்குட்புறத்தில் அம்மலைகளுக்கு அடியில் இருக்கக்கூடும் பெரிய தடாகங்களில் வசிக்கும் ஜந்துக்களென்று ஊகிக்கப்படுகின்றன. சிசிலித்தீவில் ஒரு சமவெளியில் பூமிமட்டத்திற்கு மேல் 150-அடி உயரமுள்ளதான ஒரு மலை இருக்கிறது. இது மற்ற எரிமலைகளைப்போலவே குவிந்த வடிவமுள்ளது. இதைச் சுற்றிலும் இரண்டு மூன்று அடி உயரமுள்ள அனேகம் குவிந்த வடிவமுள்ள மண்குட்டுகள் இருக்கின்றன. இவைகளில் எல்லாம் தண்ணீர் கலந்த கருப்புக் களிமண் எப்போதும் கொதகொத வென்று தளும்பிக்கொண்டே இருக்கின்றது. சிற்சில சமயங்களில் பூமிக்குள் இடிபோன்ற கிடுகிடுத்த சத்தமும், உருமலும், பூகம்பங்களும் உண்டாகின்றன. இத்தருணங்களில் இக்குன்றுகளிலிருந்து ஏராளமாய் வெளியே வீசப்படும் மட்குழம்பும், கற்களும், ஏறக்குறைய 200 - அல்லது 300 - அடி உயரம் கிளம்புவது வழக்கமாம். தென் அமெரிக்கா கண்டத்திலுள்ள [1]'கார்த்தஜீனு' பட்டணத்திற்கருகாமையிலுள்ள ஒரு சதுப்பு நிலத்தில் 20 சிறிய மண் குன்றுகள் இருக்கின்றன. இந்தக் குன்றுகளின் கூட்டத்தையே இவ்விடத்தில் படமாகச் சித்திரித்துக் காட்டியிருப்பது. இவைகள் இருக்குமிடம் ஒரு பெரிய காட்டுக்கருகாமையில், புல்பூண்டு ஒன்றும் முளையாத ஒருவிதக் களிமண் பூமி. இக்குன்றுகளின் உயரம் சற்றேறக்குறைய 24-அடி. அவைகளின் சிகரங்களில் காணப்படும் உலைவாய்களின் குறுக்களவு 2-அடி. இவைகளின் வழியாய் தண்ணீர் கலந்த மண் அபரிமிதமாய்க் கக்கப்படுகின்றது. [2]'காக்கஸஸ்' மலைப்பிரதேசத்திலுள்ள இவ்வித மலையொன்றிலிருந்து அடித்த மண் வெள்ளமானது அரைமைல் நீளம் மண்ணீர் அருவியாக ஓடியதாம்.



மண்மாரி மலைகள்.

### எரிமலைகள் தோன்றுமிடம்.

எரிமலைகள் உலகத்தில் எந்த எந்த பாகங்களில் விசேஷமாய் இருக்கின்றன என்பதைக்குறித்து சற்று விசாரிப்போம். எரிமலைகள் சாதாரணமாய் பெரிய சமுத்திரங்களையடுத்த பிரதேசங்களிலும், அவ்விடங்களிலுள்ள பெரியமலைத் தொடர்களிலும் இருக்கின்றன. [1]'பசிபிக் மகாசமுத்திரத்தைச்' சுற்றிலும் உள்ள பிரதேசங்களில் எரிமலைகள் அதிகம். மகாசமுத்திரங்களிலுள்ள பெரிய தீவுகளெல்லாம் எரிமலைகளை உடையனவாயிருக்கின்றன. அனேகம் பவளத்தீவுகளெல்லாம் சமுத்திரங்களிலுள்ள எரிமலைகளின் சிகரங்களின் மேல் உண்டாயிருக்கப்பட்டவை என்று ஊகிக்கப்படுகின்றன. எரிமலைகள் சமுத்திரங்களுக்கு அருகாமையில் இராமல் உள்நாடுகளில் தோன்றுமானால் சில சமயங்களில் பெரிய ஏறிகள் முதலான விடங்களுக்குச் சமீபத்தில் தோன்றுகின்றன. சிற்சில விடங்களில் அவைகள் தண்ணீருக்கு அருகாமையில் இராமலிருப்பது முண்டு. இதுவரையில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் ஏறக்குறைய 300 எரிமலைகளில், அமெரிக்கா கண்டத்திலும், அதைச்சுற்றியுள்ள தீவுகளிலும் நூற்றுக்கு மேலாகவும், ஆசியாகண்டத்திலும் அதைச் சேர்ந்த சுமத்ரா, ஜாவா, ஜப்பான் முதலான பலதீவுகளிலும் 150-க்கு மேலாகவும், ஆப்பிரிகா கண்டத்தில் பதினென்றும், ஐரோப்பா கண்டத்தில் இருபத்தொன்றும் இருக்கின்றன.

1 Carthagena. 2 Caucasus,

1 The Pacific Ocean.

## Hot Springs—வெந்நீர் ஊற்றுகள்.

பூமியின் உட்புறத்திலுள்ள உஷ்ணமானது எரிமலைகளின் வாய்களால் வெளியே கக்கப் படுவதல்லாமல் வெந்நீரூற்றுகளாய் வெளியே வருவதுமுண்டு, இவ்வூற்றுகளி லிருந்து வரும் ஜலமானது உலைநீர்போல் தளைத்துக் கொண்டு அதிக உஷ்ணமுள்ளதா யிருக்கும். எரிமலைகளைப்போலவே பூமிக்கு அடிப்புறத் திலிருக்கும் சூடுண்ட பிலங்களில் தண்ணீர் சேருவதாலும் அல்லது அதிக உஷ்ணமுள்ள பெரும்பாறைகள் வழியாய்த் தண்ணீரானது பூமியின் மேற்புறத்திற்கு வருவதற்கு முன்னர் செல்வதாலும் ஊற்றுநீர் அதிக சூட்டை அடைவதாக ஊகிக்கப்படுகிறது. விசேஷமாய் இவ்வித ஊற்றுகள் எரிமலைகள் உள்ள தேசங்களில் இருக்கின்றன. நெடு நாளைக்கு முன்பாக அதிகமாய் எரிந்து கொண்டிருந்து பிற்பாடு அவிந்து கிடக்கும் மலைப்பிரதேசங்களிலும் இவ்வூற்றுகள் இருப்பது சாதாரணம். நமது இந்தியாவிலும் அனேக விடங்களில் வெந்நீர் ஊற்றுகளிருக்கின்றன. கங்கா நதியின் உற்பத்திஸ்தானமாகிய கங்கோத்திரி என்னுமிடத்தில் ஓர் ஊற்று இருக்கின்றது. மற்றொன்று வங்காளத்தின் கீழ்மாகாணங்களிலுள்ள [I]'முங்கேருக்கு' அருகாமையிலிருக்கிறது. இதற்குச் சூரியகுண்டம் அல்லது சீதாகுண்டமென்று பெயர். இச்சிறிய ஊற்றில் எப்போதும் தண்ணீரானது உலைநீர் போலக் கொதித்துக்கொண்டு வெளியே வழிந்து சிற்றருவியாய் ஓடுகிறது. இவ்வதிசயத்தைப் பார்க்கப் போகும் பிரயாணிகள் அரிசியை ஒரு சிறிய துணியில் நன்றாக முடிந்து இக்குண்டத்தில் சற்றுநேரம் வைத்திருந்து பிற்பாடு சாப்பிடுவதற்கு யோக்கியமான பதத்தை அடைந்திருக்கும்போது உண்டு போவது வழக்கம். இச்சுனை, அரிசியைப் பதமாக்கக் கூடிய உலைநீர்போன்ற அவ்வளவு உஷ்ணமுள்ள ஜலமுடையது. நமது சென்னை இராஜதானியில், கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ள 'அவிநாசி' என்னும் ஊருக்கருகாமையில் 'திருமுருகன்பூண்டி' என்ற ஒரு சிறிய கிராமம் இருக்கிறது. இதில் உள்ள பிரசித்தியான ஒரு சிவாலயத்திற்கு அருகாமையில் ஒரு செய்குளம் உண்டு. இதன் அடி மட்டம் பாறை நிலம். இதற்குச் சமீபத்தில் மேல்புறத்தில் தரை மட்டமான கட்டைப்பாறை யிருக்கிறது. இதில் ஏறக்குறைய 6—7 அங்குலம் குறுக்களவுள்ள ஒரு வட்டமான துவாரம் உண்டு. இவ்வாயின் வழியாய் சிற்சில சமயங்களில் ஜலமானது பொங்கி தரை மட்டத்திற்கு மேல் சுமார் 19 அடி உயரம் எழுந்து மறுபடியும் தணிந்து வழிந்தோடுவது வழக்கம். இத்தருணங்களில் அந்தவிடத்தின் சுற்றுப்புறத்தில் கொஞ்சதூரம் வரையிலும் பூமியில் கிடுகிடுத்த சத்தமுண்டாவதுண்டு. இச்சத்தம் கேட்ட உடனே ஜலம் வெளியே வரும். இது கடைசியாய் பொங்கி ஏறக்குறைய 25-வருஷங்களுக்கு மேல் ஆகிறது. இது பொங்குவதை அவ்வூரா‌ரில் அனேகர் பார்த்திருக்கிறார்கள். இது முன்னால் 10, 12-வருஷங்களுக்கு ஒருதரம் பொங்கியதாகச் சொல்லப்படுகிறது. இதை அவ்வூரார் மகா மகதீர்த்தமென்ற புண்ணிய தீர்த்தமென்று கொண்டாடுகிறார்கள். பூமியின் உட்புறத்திலிருக்கும் உஷ்ணத்தாலேயே மற்ற வெந்நீர்,



'The Great Geyser' of Iceland.
ஐஸ்லாண்ட் தீவிலுள்ள பெரிய வெந்நீர் ஊற்று.

I Monghis.

ஊற்றுகளைப்போல இதுவும் பொங்கி யிருக்க வேண்டும். உஷ்ண மாறுபாட்டாலோ, இன்னும் வேறு எந்தக் காரணத்தாலோ இது இப்போது பொங்குவதில்லை.

எரிமலைகள் அதிகமாயுள்ள 'ஐஸ்லாண்டு' என்னும் தீவில் வெந்நீர் ஊற்றுக்கள் நூற்றுக் கணக்கா யிருக்கின்றன. 'எல்லா' எரிமலைக்கு வடமேற்கில் சற்றேறக்குறைய 50-மைல் தூரத்திற்கு அப்பால் இருக்கும் ஒரு பள்ளத்தாக்கில் 300-அடி முதல் 400-அடி வரை உயரமுள்ள ஒரு சிறிய மலைத்தொடரின் அடிவாரத்தில் மேலே சொன்ன ஊற்றுகளிருக்கின்றன. இவைகளின் அகலமோ நாலைந்து அங்குலமுதற்கொண்டு 72-அடி குறுக்களவுள்ளவைகளா யிருக்கின்றன. இவைகளிலிருந்து எப்போதும் சூடுண்ட ஜலம் பொங்கி வழிந்துகொண்டும் நீராவி குப்குப்பென்று வெளியே வந்துக்கொண்டுமிருக்கும். இவ்வூற்றுகளிலெல்லாம் பெரியது [1] 'கிரேட் கீஸர்' என்று சொல்லப்படும் பெரிய ஊற்று. இது மேலே சொல்லிய பிரகாரம் மலை யடிவாரத்தில் அமைந்திருக்கும் காட்சியை இவ்விடத்தில் படமாக அச்சிட்டுக் காட்டப்பட்டிருக்கிறது. இது ஜல்லிக்கற்கள் சேர்ந்து இறுகி 15-அடி உயரமாய் அமைந்துள்ள ஒரு திட்டையின் பேரில் இருக்கிறது. சாமானிய காலங்களில் இது 72-அடி குறுக்களவும், 4-அடி ஆழ்முமுள்ள ஒரு தடாகம்போன்று விளங்கும். இத் தடாகத்தின் நடுவில் 9-அடி குறுக்களவுள்ளதும் ஏறக்குறைய 70-அடி ஆழமுள்ளதுமான ஒரு பெருந்துவாரம் பூமியின் உட்புறத்தில் செல்கிறது. இந்த துவாரத்தின் வழியாய் அடிக்கடி வெந்நீரானது மேற்புறத்திலிருக்கும் தடாகத்தில் வந்துசேர்ந்து விளும்பின் வழியாய் நாலாபக்கங்களிலும் வழிந்து சிற்றருவிகளாய் ஓடுகின்றது. சில சமயங்களில் தடாகத்தில் இருக்கும் துவாரத்தின் வழியாய் வெகு சத்தமுள்ள உறுமல் கேட்கும் அப்போது குளத்திலுள்ள ஜலமானது கொதிக்க ஆரம்பித்து பூமியின் உட்புறத்திலிருந்து வெளியே கக்கப்படும் நீராவியுடன் சில அடி உயரம் எழும்பும். இப்படி ஒரு நாள் அல்லது இரண்டு நாளிருந்து பிற்பீடு ஊற்றுத் துவாரத்தில் அதிக குமுறுதல் உண்டாகும். சத்தம் அதிகரிக்கவே பூமியில் அதிர்ச்சியுண்டாய் ஊற்றுத் துவாரத்தின் வழியாய் பொங்கும் ஜலமானது வெகு சத்தமான வெடிப்புகளுடன் ஆகாயத்தில் 150-அல்லது 200-அடிகள் வரையில் ஒரே ஸ்தம்பமாய் கிளம்பி மறுபடி நாற்புறமும் சிதறி விழுந்தோடும். இத்தோற்றத்தை முன்பக்கத்துப் படத்தால் ஊகித்தறிந்து கொள்ளலாம். மேலே சித்தரித்துக் காட்டிய படமத்தியில் ஸ்தம்பம் போன்று நிற்பதே ஊற்றிலிருந்து மேலே கிளம்பிவிழும் ஜலம். இந்த ஜலஸ்தம்பத்திற்கு அடியில் சற்றே குவிந்த வடிவமுள்ள உருவாய்த் தோற்றுவது ஊற்று ஜலம் தேங்கி நிற்கும் தடாகத்தை உடைய மேடு. மேலே சொன்ன விதமாக ஊற்றிலும் மேற்புறத்திலுமுள்ள ஜலமெல்லாம் வடிந்து பிற்பாடு கொஞ்ச காலத்திற்குள்ளாக மறுபடியும் ஜலம் சுரந்து தடாகம் நிறையும். இது வெகு விநோதக் காட்சியாயிருக்கு மென்று சொல்லவும் வேண்டுமா ?

வட அமெரிக்காவிலுள்ள [1]ஐக்கிய மாகாணங்களில் இவ்வித வெந்நீர் ஊற்றுகள் அனேகம் இருக்கின்றன. [2]'நீயூ ஜீலாண்டு' என்னும் தீவுகளிலும் இவைகள் உண்டு.

---

**Hot Vapours—ஆவிக் துண்டங்கள்.**

பூமியின் உஷ்ணத்தினல் வெந்நீர் வெளியே வருவதல்லாமல் சூடுண்ட ஆவியாய் வெளியே வருவதுமுண்டு. இத்தாலியா தேசத்து [3]'நேபில்ஸ்' நகரத்திற்கு வடதிசையிலுள்ள [4]'பொஸ்ஸோலி' என்னும் இடத்திற்கு அருகாமையில் பூமியில் உள்ள சில பிளவுகளிலிருந்து கந்தகப்புகை கலந்த உஷ்ண ஆவியும், துர்கந்தமான சூடுண்ட காற்றும் வெளியே வந்துகொண்டிருக்கின்றன. பூர்வீக உரோம மன்னவர்களுக்கும், பிரபுக்களுக்கும் வேனிற்கால வாசஸ்தலமாயிருந்த 'பெய்யா' என்னுமிடத்தில், 'நீரோ' (Nero) சக்கிரவர்த்தியின் ஸ்நான கட்டங்கள் என்று சொல்லப்படும் ஒரு பாறையிலுள்ள போக்கின் வழியாய் நீராவியானது ஏராளமாய் வெளியே வீசப்படுகிறது. அதன் உட்புறத்துக் கோடிகளில் சாதாரணமாய் கோழி முட்டைகள் வெந்து பக்குவமாகக்கூடிய அவ்வளவு உஷ்ணமிருக்கிறது.

1 The Great Geyser.

1 The United States.
2 New Zealand.
3 Naples.
4 Pozuoli.

## SHORT STORY: SPADE OF ACE.
## ஸ்பேட் ஆவ் எஸ்.

அல்லது தன்வினை தன்னைச்சுடும்.

II

"அவன் எதற்காக சென்னகேசவலுவினுடைய வண்டியை ஸெண்ட்ரல் ஸ்டேஷன் வரைக்கும் தொடர்ந்துவந்து பிறகு வேறு வழி செல்லுகிறான்" என கோபாலன் முணு முணுத்தார்.

"அது அதிக அபூர்வமாய்த்தான் தோன்றுகிறது" என்றேன். "ஒருவேளை அவ்வண்டி இராமலிங்கத்தி னுடையதாக இராமலிருக்கலாம். சென்னையில். இரண்டு வண்டிகள் ஒன்றன் பின் ஒன்றாய்ப் போவது அதிசயமல்ல.

கோபாலன் தலையசைத்தார்
"அது அபூர்வமானதே."

நாங்கள் கடற்கரைச்சாலை வழியாய்த் திரும்பி நேராகப்போய் வாலாஜா ரோட்டுக் கெதிராக மவுண்ட்ரோட் நோக்கித் திரும்பினோம், பிறகு மன்ரோ ஸ்டாட்யூ (Munro Statue) வைக் கடந்து டியூக் டியேஞ்சல் (Duc de Angel') ஹோடேலண்டை மோடார் வண்டி போய் நின்றது. எங்கள் வண்டிக்காரன் அதிக வேகமாய் வண்டியைத் துரத்தினான். இல்லாவிடில் நாங்கள் அந்த மோடார் வண்டியைத் தொடர முடியாது-நாங்கள் இறங்கி மோடார் வண்டி பக்கத்தில் போய் நின்றோம்.

மோடார்வண்டியினின்று இறங்கி ஹோடேலினுள் நுழைந்த அம் மனிதன் இராமலிங்கமென சொல்லுவதற்கு யாதொரு சமுசயமுமில்லை. அவன் சென்னகேசவலு தெரிவித்த அடையாளங்களுக்கு ஒத்திருந்தான்.

கோபாலன்.—அவனுக்கு நாம் தொடர்ந்து வந்த சங்கதியே தெரியாது. நாம் இப்போதே சென்னகேசவலுவின் வீட்டுக்குப் போக வேண்டும். அவரைப் பல கேள்விகள் கேட்க வேண்டும்.

நாங்கள் வண்டியிலேறிப்போய் சென்னகேசவலுவின் வீட்டை அணுகியதும் அவ்வீட்டண்டை கூடியிருந்த ஜனங்களைக்கண்டு எங்களுக்கு ஆச்சரிய முண்டாயிற்று. என்ன விசேஷம்? என்று கேட்டபோது சென்னகேசவலு நாயுடு வண்டியில் இறந்திருந்தாரெனத் தெரிவித்தார்கள்.

"ஹிருதய வியாதியினால் இறந்தாரென டாக்டர் சொல்லுகிறார்" என்று ஒருபோலீஸ் இன்ஸ்பெக்டர் சொன்னார்.

கோ—"அது ஹிருதயத்தைப் பற்றியதேயல்ல. ஒரு துணிகரமான கொலை." கொஞ்ச நேரம் எங்கும் நிசப்தமாயிருந்தது.

"கொலையா!" என இன்ஸ்பெக்டர் பதட்டமாய்க் கேட்டுவிட்டு; ஒருக்காலு மிராது,—

அவர் வண்டியில் ஒண்டியாகவே யிருந்தார்: அவரை யாரும் தொந்தரவு செய்ததாகவும் காணப்படவில்லை. ஏதாவது விசேஷ சம்பவம் நேர்ந்திருந்தால் அதை வண்டிக்காரன் அறிந்திருப்பான். தனக்கு ஒன்றும் தெரியாதென சத்தியம் செய்கிறான்.

கோ:—"சரி நானும் என் சிநேகிதரும் அவ்வண்டியைத் தொடர்ந்து வந்தோம். நாங்களும் ஒன்றும் காணவில்லை. அப்படியிருந்தும் கொலை என்னமோ நடந்துவிட்டது. அதுவும் சென்ட்ரல் ஸ்டேஷனண்டை."

இன்ஸ்பெக்டர்:—தங்களுக்கு கொலையாளி யாரென்று தெரியுமோ?

கோபாலன்.—அவரை தங்களுக்கு சீக்கிரம் பரிச்சயம் செய்துவைக்கிறேன்.

இன்ஸ்பெக்டர்:—ஆனால், கொலை எவ்விதம் நடந்தது?

கோபாலன்:—அதைக் கண்டுபிடித்து விடலாம். பிணம் வண்டியில் எந்த நிலையிலிருந்தது?

இன்ஸ்பெக்டர்:—சென்னகேசவலு வண்டியில் வலதுபக்க மூலையிலுட்கார்ந்திருந்தார். வண்டிக்காரன் அவர் தூங்கிக்கொண்டிருந்தாரென நினைத்திருந்தான். அவன் அவரை

எழுப்பப் பிரயத்தனப்பட்டபோது அவர் இறந்து விட்டதாக அறிந்தான்.

"ஓர் விநோதமான கொலை!" என கோபாலன் சொல்லிக்கொண்டே தன் ஜேபியினின்று ஓர் சீட்டை எடுத்து இன்ஸ்பெக்டரிடம் தந்து "இது என்னவென தங்களுக்குத் தெரியுமா" என்றார்.

இன்ஸ்பெக்டர்:—என்ன? இது தெரியாதா! இது ஒரு ஸ்பேட் ஏஸ்சீட்டு. இதற்கும் கொலைக்கும் என்ன சம்பந்தம்?

இன்ஸ்பெக்டர் அதை உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.

"வாரும்" என கோபாலன் அக்கார்டை வாங்கி தன் சட்டைப்பையில் வைத்துக் கொண்டே சொன்னார். நாம் தாமதிக்கலாகாது : நான் பிணத்தைப் பார்க்கவேண்டும்.

நாங்கள் இன்ஸ்பெக்டரைத் தொடர்ந்து உள்ளேசென்றோம். ஹாலில் போடப்பட்டிருந்த மேஜையின் மேல் பல கடிதங்களிலிருந்தன. அவைகளில் ஒன்றைக்கண்டு கோபாலன் நின்றார். அதை எடுத்துப் பார்த்தபோது சிங்கப்பூர் முத்திரை இட்டிருந்தது. அவர் இன்ஸ்பெக்டரைப்பார்த்து,

'இக்கடிதத்தில் ஒரு ஸ்பேட் ஏஸ் இருக்கிறதா பாரும்" என்று இன்ஸ்பெக்டரிடம் சொன்னார். கடிதத்தைப்பிரித்துப் பார்த்தபோது ஒரு ஸ்பேட் ஏஸ் இருந்தது. இன்ஸ்பெக்டர் இதைக்கண்டு ஆச்சர்யங்கொண்டார். அவர் வேறு சொல்லுவதற்குள் நாங்கள் சென்ன கேசவலு இறந்து வளர்த்தப்பட்டிருந்த கட்டிலை நெருங்கினோம். அவருடைய முகம் விகாரமடையாமல் பிரகாசமாயிருந்தது. அவர் இறந்ததைத் தெரியாதவர்கள் யாரும் அவர் தூங்கிக் கொண்டிருக்கிறாரென நினைப்பார்கள்.

இன்ஸ்:—அவர் எப்படி இறந்தார்?

கோபாலன் யாதொரு பதிலும் சொல்லவில்லை. அவ்வறையில், அவ்விலங்காரமான அறையில், ஓர் நடுவயதுள்ள, இன்னும் 2 வாரத்தில் விவாகம் செய்துகளிக்க எண்ணியிருந்த அம்மனிதன் தன் எண்ணங்களெல்லாம் விடுத்து மீளா நித்திரை புரிகின்றான். அவனைக் கொன்றவன் மனம் என்ன கல்லா? ஹா பாதகா! உன்னை நான் பழிக்குப்பழி வாங்குகின்றேன் என இன்னும் பலவாறு எனக்குள்ளேயே சொல்லிக்கொண்டேன்.

கோபாலன் தன் ஆராய்ச்சிகள் முடிந்து நிமிர்ந்ததும் நான் அவர் கைகளைப் பிடித்துக் கொண்டு,

"நாம் சீக்கிரம் பழிக்குப்பழிவாங்குவோம்" என்றேன். "இராமலிங்கத்தைக் கைது செய்யாவிடில் என் மனம் அமைதியுறாது."

கோபாலன்:—அப்படியாயின் கண்ணு! உன் மனம் அமைதியுறாது தான். இராமலிங்கம் கைது செய்யப்படமாட்டான்.

"கைதியல்லவா, ஏன்?" என நான் பரபரப்புடன் கேட்டேன்.

கோ:—ஏனெனில், அவன் கொலையாளியல்ல.

"வேறு யார் கொலையாளி?' என்று நான் வினவிக்கேட்டேன்.

கோ:—உனக்கு மறுமொழி கூறுமுன் நான் சிறிது யோசிக்க வேண்டும்.

பிறகு நானும் கோபாலனும் அவர் வீட்டுக்குப் புறப்பட்டோம். "நான் ஒருவனே இவ்வேலையைச் செய்யவேண்டியிருக்கிறது. இக்கொலையின் முடிவைப் பார்க்கவேண்டுமாயின் உனக்கு அதைப்பற்றித் தெரிவிக்கிறேன். இது சென்னை வாசிகளுக்கு ஆச்சர்யத்தை விளைவிக்கும் எப்பேர்ப்பட்ட அந்தரங்க சூழ்ச்சிகளும் ஓர் சிறு எதிர்பாராத சம்பவத்தால் கெடுகின்றனவென யாவரும் அறிவார்கள். இரண்டாவது சிங்கப்பூரிலிருந்து வந்த கவரில்லாவிடில் இந்த கேஸ் எப்போதுமே சரியான

முடிவுக்கு வந்திராது என்று கோபாலன் சொன்னார்.

மறுநாள் மாலை 3 மணிக்கு நான் கோபாலன் வீட்டுக்குச் சென்றேன். அவர் என்னை அச்சமயம் வரும்படி அழைத்திருந்தார். அவருடன் போலீஸ் இன்ஸ்பெக்டரும் இருந்தார்.

கோ:—ஸ்வர்ணம்பாளின் சிறிய தந்தையும் அவள் சொத்துக்குக் காரியஸ்தருமான ஸ்ரீராமுலு நாயுடுவுக்காக நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். அவர் கேஸின் முடிவைப்பற்றி அறிய ஆவலுள்ளவராயிருக்கிறார்.

அப்போது கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. ஒரு நிமிஷத்திற்கெல்லாம் டாக்டர் ஸ்ரீராமுலு நாயுடு உள்ளே வந்தார்.

கோ.—வாருங்கள் நாற்காலியில் உட்காருங்கள்.

ஸ்ரீராமுலு நாயுடு உட்கார்ந்தபின் கோபாலன் அவரைச் சுட்டிக் காட்டி "நண்பர்களே! இதோ இருக்கிறாரே ஸ்ரீராமுலுநாயுடு இவர் தான் சென்னகேசவலு நாயுடுவின் கொலையாளி" என்றார்.

நாங்கள் இருவரும் திக்பிரம்மை யடைந்து அப்படியே ஸ்தம்பித்து விட்டோம். டாக்டர் ஸ்ரீராமுலு மாத்திரம் உடனே எழுந்து,

"என்ன முட்டாள்தனமாய் உளறுகிறாய், கோபாலா" என்று படபடப்பாய்ச் சொன்னார்.

கோ.—"போதும், ஸார், கேஸ் மெத்த வெளிப்படையாயிருக்கிறது. நீர் செய்த சூழ்ச்சியைத் தோற்கடிக்க வல்லது ஒரே வஸ்து. அது கடைசியாய் நேர்ந்துவிட்டது. அது தான் இரண்டாவது சிங்கப்பூரிலிருந்து வந்த ஸ்பேட் எஸ் அடங்கிய கவர். அதனால் தான் உம்முடைய சூழ்ச்சிகள் பிரயோஜனப்படாமல் போயின.

இப்படி சொல்லிக் கொண்டே அவர் அதற்கு மூன்நாள் சென்னகேச்வலுவின் வீட்டில் பிரித்துப் பார்த்த கவரை எடுத்து ஸ்ரீராமுலு நாயுடுக்குக் காட்டி "இந்தக் கார்டு நேற்று இராமலிங்கத்தினிடமிருந்து வந்தது" என்றார்.

ஸ்ரீராமுலு நாற்காலியில் சாய்ந்தார். அவர் முகத்தில் கொலை பாதகக் குறி எழுதப்பட்டிருந்தது.

அவர் செய்த கொடுஞ் சூழ்ச்சி மெத்த தீர்மானம்: ஆனால் அது மற்ற கொடிய சூழ்ச்சிகள் போலவே கெடுதலாக முடிந்தது. தன் தமையனின் குமாரத்தியாகிய ஸ்வர்ணம்பாளுக்கு விவாஹம் நடந்து விட்டால் அவருக்கு இப்போது வரும் வருஷ வருமானமான 6000-ரூபாய் நின்று போய்விடும். அவ்வருமானத்தைக் கொண்டுதான் இவர் சிலகாலமாக ஜீவித்து வந்ததாகத் தெரிகிறது.

இதைக் கேட்ட ஸ்ரீராமுலு அடியற்ற மரம் போலானார். அவர் யாதொன்றும் சொல்லாமல் முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டார்.

கோ.—ஹா, என்ன துணிகரம்; இவன் ஒரு படுகொலையைச் செய்தான். ஓர் குற்றமற்ற மனிதன் வாழ்க்கையைக் கொள்ளை கொண்டான். இறந்தவரால் தன்வசம் விடப்பட்ட பெண்ணின் ஹிருதயத்தை நோக்க—

என்று முடிக்குமுன் கோபாலன் டாக்டரின் பக்கத்தில் வேகமாய்ச் சென்றார். நாங்கள் அவனைத் தொட்டுப்பார்த்தபோது ஸ்ரீராமுலு மண்ணுலகின் தீர்ப்பைக் கேட்க இசையாது விண்ணுலகடைந்தான்,

கோ—அவன் செய்த யோசனை வியக்கத் தக்கதே. இரண்டாவது கவர் வந்திராவிடில் கேஸ் சரியான முடிவுக்கு வந்தே யிருக்காது. இதோ இவைகள் தான் மொத்த சங்கதி: நான் முன்னே தெரிவித்த பிரகாரம் ஸ்வர்ணம்பாள் தன் பராமரிப்பில் இருக்கும் வரை ஸ்ரீராமுலுக்கு வருடத்தில் 6000-ரூபாய் வருமானம் வரும். பத்து வருடத்துக்கு முன் அர்பத்நட் பாங்க் முழுகி விட்டதால் அவன் ஏழையானவன். அவன் பல காரியங்களைக் கண்டு பிடிப்பதற்காகச் செய்த முயற்சிகள் வீணாயின. ஆகையால், அவன் இப்பணத்தையே பூரணமாய் நம்பியிருந்தான். ஸ்வர்ணம்பாளுக்கு விவாஹம் நடந்து விட்டால் இவ்வருமானம் போய்விடும்.

ஆதலால் சென்னகேசவலுக்கும் ஸ்வர்ணம்பாளுக்கும் விவாஹ நிச்சயார்த்தமான போது அதைத் தடுக்கப்பார்த்தான். தன் எண்ணம் நிறைவேறாமல் விவாஹம் நிச்சயமாய் விட்டதால் சாக்குகள் சொல்லி காலஹரணம் செய்யப் பார்த்தான். கடைசியாய் சென்னகேசவலு ஒரே பிடிவாதமாய் விவாஹத்தை இன்னும் இரண்டு வாரத்துக்குள் பூர்த்தி செய்ய நிச்சயித்ததால் தன் சுயநலத்தைக்கருதி இராமலிங்கமும் தானும் சென்னகேசவலுவின் விவரப்படி உருவத்தில் ஒத்திருந்ததால் சென்னகேசவலுவை கொலை செய்துவிட யோசனை செய்தான்.

கொலைக்குற்றம் இராமலிங்கத்தைச் சாரும்படி, அவன் பயமுறுத்திய வண்ணமே ஸ்பெட் ஏஸை சென்னகேசவலுக்கு அனுப்பினான். அதன்மேல் அவர் என்னிடம் யோசனை கேட்க வந்ததைத் தெரிந்து கொண்டு தான் ஒரு வாரமாய் சிங்கப்பூர் இராமலிங்கம் போல் தங்கியிருந்த டியூக் டீவஞ்சல் ஹோடேலிலேயே ஓர் மோடார்காரை வாடகைக்குப் பேசிக்கொண்டு தன் வேலைக்காரனை வண்டி விடும்படி ஏற்பாடு செய்து என் வீட்டுப் பக்கத்தில் சென்னகேசவலுவுக்காக காத்துக் கொண்டிருந்தார்கள்; காலஹரணம் செய்தால் தொந்தரவுக்கு இடமாகுமென்றும் கொலை நடந்ததைக் கேட்டால் உண்மையான இராமலிங்கம் பயந்து சென்னைக்கு வரமாட்டானென்றும் நம்பி சமயம்பார்த்து காரியத்தை முடித்துவிட்டு தான் க்ஷேமமாயிருக்கலாமென்றும் எண்ணினான்.

நாம் அவனைத் தொடர்கிறோமென்பதை அவன் அறியவில்லை யென்றெண்ணினோமே அது தவறு. ஏனெனில், இராமலிங்கத்தின் அடையாளத்தை நிலை நிறுத்த அவன் அந்த மாதிரி செய்தான்.

நாம் ஸென்ட்ரல் ஸ்டேஷனைக் கிட்டும் போது ஸ்ரீராமமுலுவண்டியும் சென்னகேசவலுவண்டியும் ஒன்றின் பக்கம் ஒன்றாய் நின்றன. அப்போது அவன் இந்தக்குழாயைத் தன்கையில் பிடித்துக்கொண்டு சென்ன கேசவலுவின் பக்கமாய்ச் சாய்ந்தான்,—

எனச்சொல்லிக்கொண்டே கோபாலன் தன்னுடைய ஜேபியினின்று ஒருகுழாயை எடுத்தார். பிறகு அதை மேஜையின்மீது ஜாக்கிரதையாக வைத்துவிட்டுச் சொல்லுகிறார்:

ஸ்ரீராமுலுவின் அறையைச் சோதித்த போது இவ்வஸ்துவைக் கண்டுபிடித்தேன். அதில்விஷத்தின் ஆவியை நிறைந்திருக்கிறது. அது அவனுடைய முயற்சிகளில் ஒன்று. குழாவை அழுத்தினால் அவ்விஷ ஆவி பல கெஜதூரம் பாயவல்லது. அவன் அதிக தைரியத்துடனும் ஜாக்ரதையுடனும் இதை சென்ன கேசவலுவின் மூக்கின் பக்கமாய்விட்டான். அவர் உடனே இறந்தார். அது ஒன்றும் பாதைப்படுத்தாமல் அவர் மடிந்ததனால் ஹிருதய நோயால் இறந்ததாக டாக்டர் சொன்னார்.

சென்ட்ரல் ஸ்டேஷனண்டை சென்னகேசவலுவைக் கொன்றபின் டியூக் டியேஞ்சல் ஹோடேலுக்குத் தன்னைப்பின்பற்றி வரும்படி செய்தான். சென்னகேசவலுவின் கொலை அப்போது நமக்குத் தெரியாதாகையில் நாம் அவனைப் பின்பற்றிச் சென்றோம். நாம் அங்கி

ருந்து நீங்கிய 5-நிமிஷத்துக்கெல்லாம் தானும் அதைவிட்டு அகன்றான்.

அவனுடைய துர்அதிர்ஷ்டவசமாய், சென்னகேசவலுவுக்கு இராமலிங்கம் சிங்கப்பூரினின்று அக்கவரை அனுப்பினன். சென்னகேசவலு நம்மிடம் வந்திருந்தபோது அந்த தபால் அவருக்கு வீட்டுக்குவந்தது.

நாம் வீட்டினுள் நுழைந்ததும் ஸிங்கப்பூரின் தபால் முத்திரையைக் கவனித்தேன். கவர் கார்டு அளவு கிருந்தமையாலும் மூலைகளெல்லாம் ரவுண்டாக விருந்தமையாலும் இது சீட்டு கடுதாசியென கண்டுகொண்டேன். நான் அதைப்பிரிக்க மற்றொரு ஏலைக்கண்டபோது தன்யோசனைகள் யாவும் மாறுபட்டன. அதிக துணிகரமானதும் தீரமானதுமான படுகொலை நடந்ததென அறிந்தேன். நிச்சயமாய் இக்கார்டு சிங்கப்பூரிலிருக்கும் இராமலிங்கத்தினிட மிருந்துவந்தது. முதல் வந்த கார்டு சென்னையில் போஸ்ட் செய்யப்பட்டது. இப்போது அதை யார் அனுப்பியிருப்பார்கள்.

“இக்கேள்வி அதிசீக்ரமே விடையளிக்கப் பெற்றது. சென்னகேசவலு இச்சங்கதியைப் பற்றி தன் காதலிக்கும், ஸ்ரீராமுலுவுக்கும் தவிர வேறொருவருக்கும் தெரிவிக்கவில்லை. இம்மனிதன் ஒரு காரணமாய் விவாஹத்தை தடுத்துவந்தான். அவனுக்குக் கலியாணம் இடையூறாக இருந்தாலன்றி அவன் தடுக்க முகாந்திரமில்லை. நான் பலவழிகளினின்று இக்கால் கதியை அறிந்தேன். ஸ்வர்ணம்பாள் விவாஹம் இவன் கண்டு பிடிக்கப்போகும் சங்கதி முடியுமுன் நேருமாயின் அவன் நாசமாகப்போய் விடுவான்.

“ஸ்ரீராமுலுமாத்திரம், அதிக தைர்யமுள்ளவனும், தீவிர புத்தியுள்ளவனாகவும், நான் செய்யப்போகும் குற்றச்சாட்டுக்கு எதிர்பார்த்திருந்து தைர்யமாய் மறுதலித்திருந் திருப்பானேயாமாகில் நாம் இக்குற்றத்தை அவன்மேல் சாட்ட அதிகஷ்டமாய் முடிந்திருக்கும். ஆனால் அவன் செய்தகுற்றம் இதுவே முதன்மையாகையால், அவன் எப்போது தைர்யமாக இருக்கவேண்டுமோ அப்போது அதைர்யமடைந்து அபஜயமடைந்தான். அவன் கையில் வைத்திருந்த விஷம் அவன் தன்கைகளால் முகத்தை மூடியபோது வாயினுள் சென்றதால் மறிந்தான். தன்வினை தன்னைச்சுடும் என்றபடி அவன் சூழ்வினை அவனையே சூழ்ந்துகொண்டு சமயத்தில் ஆளைக்காட்டிக் கொடுத்துவிட்டது.

சென்னகேசவலு “சூதுவிரும்பேல்” என்னும் மூதுரையைமதித்து நடந்திருப்பானாகில் இப்படி அகால மாணத்துக் காளாகியிருக்க மாட்டான். ஆதலால் ஸன்மார்க்கத்தைவிட்டு விலகினால் பின்னர் நேர்வழிப் பட்டுய்வது கஷ்டம். திருட்டுத்தனமாகக் குற்றஞ்செய்கிற சாமர்த்தியசாலிகள் சூழ்ச்சியைக் காட்டிக்கொடுக்க மனச்சாக்ஷி யொன்று தன்னுள்தானே காவலாயிருக்கிறது. அந்தக் காவல் கடந்து நடப்பது எப்போதும் அநர்த்தம் விளைக்கும். (முற்றும்)

---

## TIT BITS FOR SCHOOL CHILDREN.

## பள்ளியிற் பழகும் சிறுவர்க்கான துக்கடாக் கதைகள்.

“சோக்கா, சோக்கா, சோறுண்டோ?
சோழியன் வந்து கெடுத்தாண்டோ!”

குழந்தைகளே, நான் உங்களுக்கு சின்னச்சின்ன துக்கடாக்கதைகள் சொல்லுவதாக ஒப்புக்கொண்டு விட்டபடியால், பத்திராசிரியார் என்னை மாசாமாசம் சதிருக்கிருக்கிறார். அறைக் கூத்து அம்பலக் கூத்தானால் அதைத்தான் “சதிருக்கிழுக்கிறது” என்று சொல்கிறது. அறையிலாடுவது சுலபம். அதையே அம்பலத்திலாடுவது கஷ்டமாகும். ஏனெனில் சபையில் கூட்டம் நெருங்கியிருக்குமாதலால். கூட்டம் நெருங்கியிருந்தால் என்ன? என்கிறீர்களோ, ஆயிரங்கண்கள் ஒரே காலத்தில் ஒருவனைப் பற்றி நின்றால் அது எப்படியிருக்கும் தெரியுமா? சூரியனுடைய கிரணங்கள் பரவி யிருந்தால் அது பஞ்சிலுள்ள ஈரத்தை

மட்டும் இழுத்துக்கொண்டு அதை உலரச் செய்யுமேயன்றி அதை எரித்துவிடும் சக்தி அக்கிரணங்களுக்கில்லை, ஆனல் ஒரு சூரிய காந்திக் கண்ணுடியை வெயிலில் பிடித்தால் அதில் விழும் கிரணங்களெல்லாம் ஏகாக்கிரமாய் ஒருமுனைப் பட்டுப் பாயும். அப்பொழுது பஞ்சு தீப்பற்றிக்கொண்டு எரிந்துபோம். இந்தத் தீ எங்கிருந்துண்டாயிற்றென்றால் அந்தக் கிரணங்களிடத்தி லிருந்தே உண்டாயிற்று. ஆனல் பஞ்சில்லாதபோது அத்தீயேன் காணப்படவில்லையென்றால் "அதற்குப் பற்றுக்கோடு இல்லாமையினல் காணப்படவில்லை." அதேமாதிரி அஞ்சுபேராய் அறையிலாடின கூத்தை ஆயிரம் பேர் முன் அம்பலத்தாடவேண்டுமென்றால், ஆடுகிற பேர்வழியிடத்தில் குற்றங்குறை யொன்றும் இருக்கக் கூடாது. அப்பொழுதுதான் அம்பலக்கூத்துச் சிறக்கும். குற்றங்குறை யிருந்தால் பஞ்சு சூரிய காந்தத்தின்முன் தீப் பற்றிக்கொண்டது போல், அக்குற்றங்குறை ஜனசமஷ்டிப் பார்வையில் எப்படியும் வெளியாகிவிடும். ஆதலால்தான் உங்களோடு அறையிலாடினதை யெல்லாம் அம்பலத்தாடுவதென்றால் கொஞ்சம் கஷ்டமாயிருக்கிறது! எப்படியும் நான் குட்டியண்ண தானே! இளங்கன்று துள்ளுபயமறியாது அல்லவா!

ஆம்! ஆனல், துள்ளினமாடு பொதி சுமக்கும், என்பார்கள்! அதுவும் ஞாபகத்தி லிருக்கட்டும்! உஷார்!' என்கிறார் நமது பெத்தண்ணுவாம் பத்திராசிரியர். அவர் சொல்வதிலும் ஒரு சூக்ஷ்மமிருக்கிறது! ஆகையால் நான் அம்பலக் கூத்தாடும்போது நீங்களெல்லாம் இப்படி குறுக்கே பேசி சேஷ்டை செய்யக் கூடாது. கன்றுக்குட்டி மாட்டுத் தொழுவத்தில் தான் துள்ளலாம்: நடுவீதியில் துள்ளினல் யாருக்கும் அசௌகரியமில்லாமற் பார்த்துக்கொள்ள வேண்டியது சொந்தக்காரனுடைய பொறுப்பு. அதுபோல நீங்களும் நானும் கூடி வேடிக்கை விநோதமாய்ப் பேசிக் குதிப்பதில் யார் காலையாவாது மிதித்துவிட்டால் அதற்குப் பத்திராசிரியர் உத்திரவாதியாவர். ஆகையால் நீங்களெல்லாரும் விவேகசிந்தாமணிவெளியில் விளையாடும் பொழுது வாலைச்சுருட்டி மடியில் வைத்துக்கொண்டு துஷ்டத்தனம் ஒன்றும் செய்யாமல் சமர்த்துப் பிள்ளைகளாக விருக்கவேண்டும். தெரிந்ததா! இந்தப் போதனையை மறந்து விடாதீர்கள். உங்களில் யாராவது விஷமம் செய்தால் பத்திராசிரியர் உங்களையும் என்னையும் கிட்ட அண்டவிடமாட்டார். ஆகையால் ஸாவதானமாக விருந்து கேளுங்கள்.

ஒரு ஊரிலே ஒருவன் பரம ஏழையாயிருந்தான். என்ன ஏழையாக விருந்தாலும் பசி யாரைவிட்டது! ஏழை, பணக்காரன், அரசன், பிரஜை யென்கிற வித்தியாசம் ஒன்றும் அதற்கு இல்லை. உதராக்னி யெரிவதற்குக் கட்டையில்லாவிட்டால் அது பசி ரூபமாகத்தோன்றி தாபாக்னியாக தேஹத்தைத்தஹித்து விடும். ஆதலால் யாராயிருந்தாலும் பசிக்கு ஏதாவது ஆகாரம் போட்டே யாகவேண்டும். அந்தப் பரம ஏழையும் அப்படியே படாதபாடெல்லாம் பட்டு போதும் போதாமைக்குப் பிச்சையெடுத்து ஆகாரந்தேடி வயிற்றுக்குப் போட்டு வந்தான். அவன் பரம ஏழையாக விருந்ததோடு தரித்திரமும் அவனைப் பிடித்திருந்தால் அவன் மஹாலோபியாயிருந்து உண்ணச் சோறில்லாவிட்டாலும் காசு சேர்ப்பதில் கண்ணுயிருந்தான். இரவில் உண்ணும் போது விளக்கேற்றி வைத்து உண்டால் எண்ணெய்ச் செலவு நஷ்டம் தானே, விளக்கில்லாமலுண்டால் எண்ணெய்ச்செலவை லாபம் பிடித்து "சிறுதுளிபெருவெள்ளம்" என்று சிறுகச்சிறுகப் பிடித்துப் பெருந்தனம் சேர்த்து விடலாமென்று அவன் எண்ணலானுன். ஆகவே அவன் உண்ணும் போதுகூட வீட்டில் விளக்கேற்றுவதில்லை.

இப்படியிருக்கையில் அந்தவீட்டுக்கொல்லையிலுள்ள கிணற்றில் சோற்றுக்கின்றி துர்மரணமாகச் செத்தவனுடையஆவி பிசாசு ரூபம்கொண்டு பகல் நேரத்தில் கிணற்றுக்குள்

தானே ஒண்டியிருந்து இரவு நேரத்தில் அந்த வீட்டு முற்றத்திலுள்ள வேப்பம் செடியொன்றில் தொத்தியிருந்து இவன் இரவில் சோறுண்ணும் போது இவனுக்குத் தெரியாமல் இருட்டில் அன்னரஸத்தை யெல்லாம் தான் புசித்து வசித்து வந்தது.

ஏழைக்கு இது தெரியாது. ஆனல் அவன் என்ன சாப்பிட்டாலும் அவன் பசிதீராமல் குடலைப் பிடுங்கிக்கொண்டேயிருந்தது கொண்டு என்னமோ வியாதி யென்று நினைத்து வைத்தியனுக்குக் கையைக்காட்டினல் காசு கொடுக்க வேண்டுமே யென்று அஞ்சி, கண்டார் கழிந்தாரிடமெல்லாம் தன் குறையைச் சொல்லி முறையிட்டு வந்தான். இப்படியிருக்கும் நாளில் ஒரு நாள் ஒரு சோழியப்பிராமணன் அந்த வீட்டுக்கு வந்தான். அவன் இரவு நேரத்தில் வீட்டில் விளக்கில்லாமலிருக்க ஏனென்று அது கேட்டான். ஏழை "விளக்குவைத்து எந்நேரமாயிற்று! இது வரையில் யார் விளக்கு வைத்திருப்பார்கள்? போம், போம்!" என்றான். ஆனாலும் அவருக்கு தாஹத்துக்கு சாப்பிட வேண்டியிருந்தால் சற்று விளக்கேற்றும்படி கேட்டுக் கொண்டான்.

"போ போ! உனக்கென்ன, வாய்க்குக்கை வழி தெரியாது போலிருக்கிறதே! விளக்கில்லாமல் இந்த தீர்த்தத்தை சாப்பிடத்தெரியாதா உமக்கு என்ன!" என்று பரிஹாஸம் செய்தான். இவன் பரமலோபி யென்றுணர்ந்து, "அப்பா! நீ சாப்பிடுகிற போது விளக்கு வெளிச்சத்துக்கு என்ன செய்கிறாய்?" என்று கேட்டான் அந்தச் சோழியன்.

"நான் இருட்டில் தான் சாப்பிடுகிறவழக்கம்!" என்று பதில் சொன்னான் ஏழை.

"சிவசிவா! இந்தச்சண்டாளன் கையால் தீர்த்தம் சாப்பிட்டாலும் இவன் பாபம் நம்மைப் பற்றிக்கொள்ளு" மென்று சொல்லி கையிலுள்ள தீர்த்த பாத்திரத்தைக் கீழே வைத்து விட்டு ஓடலானான். அவனோடே இவனோடே, ஏழை சோழியனைத் துரத்திக்கொண்டு போய்க் கடைசியில் அவனைப்பிடித்து ஐயா, ஐயா, உம்காலில் விழுகிறேன் ஒரு வார்த்தைக்குமட்டும் பதில் சொல்லிப்போம் என்று வழியை மறைத்துக்கொண்டு அவன் காலில் விழுந்தான்.

சோழியன் "என்ன கேட்கவேணுமோ, கேட்டுத்தொலை" யென்றுசொல்ல, நீர் வந்த போது உம்மோடு எத்தனைபேர் கூடவந்தார்கள் சொல்லும் என்றான்.

"நான் தனியாகத்தான் வந்தேன்" என்றான் சோழியன்.

"இல்லை; நீர் பேசிவிட்டு ஓட்டம் பிடிக்கவே, உம்முடைய பேச்சைக்கேட்டு 'சபாஷ்!' என்று கைகொட்டிச் சிரித்துக்கொக்கரித்த சப்தம் கேட்டதே, கண்ணுக்கு மட்டும்தான் ஆள் தென்படவில்லை. அந்தப் பேச்சரவம் எங்கிருந்து வந்தது?" என்றுகேட்டான்.

சோழியன் சற்று நிதானித்துப்பார்த்து அவன் கதையையெல்லாம் சொல்லக்கேட்டு அப்பா அந்தவீட்டில் பிசாசு குடியிருக்கிறாப் போலிருக்கிறது. இருட்டில் நீயுண்கிற உணவெல்லாம் உனக்கு உடம்பில் ஒட்டாமற் போவதற்குக்காரணம் அதுதான். இருட்டில் பிசாசு அன்னரஸத்தையெல்லா முண்டுவிட நீ அந்த சேஷத்தை யுண்கிறாய். அதுதான் உனக்கு உண்ணும் உணவு உடம்பில் ஒட்டவில்லை. விளக்கேற்றிவைத்து உண்டு பார்! நான் சொல்வதினுண்மை வெளியாகும்." என்று சொல்லிப்போனான்.

மறுநாள் ஏழை அப்படியே விளக்கேற்றி வைத்துச்சோறுண்ண அன்றைக்குமட்டும் அவன் உண்டது பசிதீரவிருந்தது. அப்பொழுது இன்னம் என்ன அதிர்சயம் நடக்குமோ என்று அவன் உற்றுக்கேட்ட வண்ணமாயிருக்கையில் கொல்லைக்கதவைத் தட்டுகிற அரவம்காதில் வீழ்ந்தது. உடனே "சொக்கா, சொக்கா, சோறுண்டோ?" என்கிற சப்தம் காதில்விழுந்தது. அதற்கு வேப்பமரத்துப் பிசாசாகிய சொக்கன், "சோழியன்வந்து கெடுத்தான்லோ!" என்று பதில் சொல்லியது.

குழந்தைகளே, ஏழைதன் மனையிருள் நீங்கிச் சுகப்பட்டாற்போல் நீங்கள் உங்கள் மனவிருள் நீங்கிச் சுகப்படவேண்டும். அந்த ஏழை மனைவிளக்கின்றிச் சோறுண்டது அவனுக்கு உடம்பில் ஒட்டாமற் போனதுபோல், நீங்கள் 'அறிவிளக்கு' இன்றிப் படிப்பதெல்லாம் உள்ளத்திற்பதிந்து உண்மையறிவை விர்த்திசெய்யாமல் வெறும் ஏட்டுப் படிப்பாக முடிகிறது. "ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது" என்று உங்களுக்குத்தெரியுமே. சோழியன் என்றால் தீக்ஷிவகித்து ஸ்வாமி சேவைசெய்யக் கங்கணம்கட்டிய தீக்ஷிதர்கள் என்றுசொல்லும் தில்லைவாழ் அந்தணர் குலத்துக்குச் சொல்கிறது. அவர்களுடைய ஜாதிப்பேர் அது. அந்த சோழியப்பிராமணன் தீர்த்தபானம் கேட்டாற்போல் விவேகசிந்தாமணி உங்களுக்குபகாரமா யிருக்கவேண்டுமென்கிற அவாக்கொண்டு "தண்ணீர்ப்பிச்சை" அதாவது "ஈரமுள்ள நெஞ்சம்" வேண்டுமென்று பிச்சை கேட்கிறது. விவேகசிந்தாமணிப் பத்திராசிரியர் அந்தச்சோழிய ப்ராஹ்மணனைப்போல் ஊருக்குழைக்கக் கங்கணம்கட்டி மாயாண்டிரூபமாக வெளிவந்தவர். அவரே இப்பொழுது சோழியப்பிராமணனாக உங்கள் மனவிருள் போக்கக் கங்கணம் கட்டியிருக்கிறார். சமஷ்டிசேவையால் சேவைசிறப்பெய்தும். ஆகையால் நீங்கள் விவேகசிந்தாமணி சொல் வார்த்தையைத் தள்ளாமல் கேட்டுப் பிழைத்தால் மனவிருள் நீங்கி விவேகம் என்னும் அறிவிளக் கேற்றிவைத்து உண்டசோறு உடம்பிலொட்டம் பிழைக்கலாப். கேளாவிட்டால் சொக்கன்பாடு கொண்டாட்டம்தான்.

"உண்டு பசி தீர்ந்தாற்போலிருக்கும்
கண்டுகள் காட்சிமிகும்"—என்று

ஔவைப்பாட்டியும் ஞானக்குறள் ஓதியிருக்கிறார்.

இப்படிக்கு,
உங்கள் அன்புள்ள,
குட்டியண்ணா.

## SCIENTIFIC RECREATIONS FOR THE YOUNG.

## சிறுவர்க்கான ஜாலவினோதங்கள்.

### ஜாலசம்மட்டி.

நீளமாயும் வாய் நெருக்கமாயுமுள்ள ஒரு புட்டியில் கால்பங்கு ஜலம் வார்த்து அடுப்பின் மேல் வைக்க, சற்றுநேரத்திற்குப் பின்பு புட்டிக்குள்ளிருக்கும் ஜலம் உஷ்ணத்தினால் கொதித்து நீராவியாய் புட்டிவாயின் வழியாய் வெளியில் புறப்படும். இவ்வாறானபின்பு புட்டியை அடுப்பினின்றும் எடுத்து சில வினாடியானபின், புட்டியின் வாயில் அழுத்தமாய் 'கார்க்கு' அடைத்து முத்திரை மெழுக்கால் முத்திரைபதித்து குளிர்ந்த இடத்தில் புட்டியை வைத்துவிடவும். நன்றாய் உஷ்ணம் ஆறினபின்பு புட்டியை எடுத்துக் கீழுமேலுமாகக் குலுக்க, உள் உலவும் ஜலம் கற்கட்டிகள் போல் புட்டிக்குள் தாக்கும்.

### 15. சூக்ஷும கணிதம்.

ஆயிரம் போர்வீரர்களை ஒருவரிசையாக நிற்கவைத்து சேனாதிபதியானவன் அவ்வரிசையில் முதலில் நின்றவனுக்கு ஒரு பழமும் இரண்டாவது நின்றவனுக்கு இரண்டு பழமும் இவ்வாறே கடைசியில் நின்றவனுக்கு ஆயிரம் பழமும் அளித்தனன். பின்பு எல்லாரும் ஒருபெரிய கூடையில் வாங்கின பழத்தை ஒருங்கே போட்டுவிட்டனர். கூடையில் மொத்தம் எத்தனை பழமிருக்கும்? முதல் எண்ணிலிருந்து ஆயிரம் எண்வரையிலும் கூட்டி மொத்தஞ் சொல்ல அநேக நாழிகை பிடிக்குமல்லவா? இப்படிச் சொல்லாது 2-நிமிஷத்திற்குள் முழுமொத்தத்தையும் சொல்லவேண்டும். இது சொல்வதெப்படி?

விடை:—கடை எண்ணாகிய ஆயிரத்தையும் அதின் சரிபாதியாகிய ஐந்நூற்றையும் பெருக்கி வந்த தொகையோடு கடை எண்ணாகிய ஆயிரத்தின் பேர்பாதியாகிய ஐந்நூற்றைக் கூட்ட மொத்தம் வந்துவிடும்.

1000-கடைசித்தொகை
500-ஷை யின் பாதி

பெருக்கிவந்ததொகை 5,00,000-இத்தோடு
ஆயிரத்தில் பாதியாகிய 500-ஐகூட்ட

மொத்தம் 5,00,500